# மேலதிகாரி

"கலெக்டர் வேலைக்குப் போக போகிறவனைப் போல, 'டிப்டாப்பாக' உடுத்திண்டு ஊரைச் சுத்திண்டு வந்தாயே, ஏண்டா அண்ணா! நோக்குக் கடைசியிலே, 'கிளார்க்' வேலையன்னா கிடைத்ததாம்!'' என்று கேலி செய்தாள். 'கர்லை'ச் சரிப்படுத்திக் கொண்டிருந்த காமினி. 'கொரங்கே! நேக்குக் கிளர்க் வேலை கிடைச்சுது போதும், உனக்கு எந்தக் 'கரண்டி' வந்து வாய்க்கறதோ, யார் கண்டா? என்னைக் கேலியா செய்கிறே?'' என்று கோபமாக அல்ல, செல்லமாக பேசினான் கச்சாபகேசன். ''அவளுக்கேண்டா. 'கரண்டி'யும் 'சவுண்டி'யும். என் பொண்ணோட இலட்சணத்துக்குக் கவர்னரன்னா கிடைக்கணும்?'' என்று கூறினாள், காமினி, கச்சாபகேசன் எனும் இருவரைப் பெற்றெடுத்த பெருந்தேவி. ''என்னமோ போடி இதாவது பகவத் கடாட்சத்தாலே கிடைச்சுதே. அதைச் சொல்லு'' என்று கூறிக் கொண்டே மடிசஞ்சியைப் சரிபடுத்திக் கொண்டார், மகாலிங்கக் குருக்கள்.

உள்ளூர் தேவாலத்தியத்திலே அவர்தான் அர்ச்சகர்.

''அப்பா! ஆபீசுக்கு இன்னக்கே வரச்சொல்லியிருக்கா?'' என்றான் கச்சாபகேசன்.

''நாள் நல்லா இருக்கா பாருங்கோ'' என்று கூறினாள் பெருந்தேவி. ''மனசு நல்லா இருந்தால், எல்லா நாளும் நல்ல நாள்தான். மேலும், ஆபீசிலே ஆர்டர் போட்டான் பிறகு, நாள் நட்சத்திரம் பார்த்துண்டு இருக்கலாமோ! நல்ல சகுனமாகப் பார்த்து, அனுப்பிவை'' என்று கூறிவிட்டு, கோயிலுக்குக் கிளம்பினார், குருக்கள்; கோயில் தோட்டத்திலே குலுங்கிக் கொண்டிருந்த 'கச்சிலி'யைக் கொண்டு வர.

''ஏண்டா அண்ணா! கோபிக்காமச் சொல்லு. நோக்கு அங்கே என்ன வேலை?'' என்று கேட்டாள் காமினி.

''ஏதாவது ஒரு செக்ஷனிலே கிளர்க் வேலையிருக்கும். . .'' என்றான் கச்சாபகேசன், யோசித்தபடி.

''தரப்படும் வேலை எதுவாக இருந்தால் என்ன– சமத்தா நடந்துண்டு, மேலதிகாரிகளோட தயவைச் சம்பாரிச்சுண்டா, தானா உத்யோகம் மளமளன்னு உயர்ரது. நேக்குத் தெரிஞ்சு, அனந்தாச்சாரியோட பெரிய மாப்பிள்ளை அட்டெண்டர் வேலைக்குத்தான் போனான். இப்போ மானேஜராகவே வேலையாம். . . அதிர்ஷ்டம்னு ஒண்ணு இருக்கேன்னோ!'' என்று பெருந்தேவி கூறினாள். ''அதிர்ஷ்டமல்லடி அம்மா, அதிர்ஷ்ட மல்ல. அவா ஆத்து ஆமவடை மோர் குழம்பு செய்தவேலை அது; அட்டெண்டரை மானேஜராக்கி இருக்கு'' என்றாள் காமினி. ''என்னடி அசடு உளறிண்டு. . .'' என்று கண்டித்தான் கச்சாப கேசன். பெருந்தேவி அம்மையோ, ''கச்சு! அவ சொல்றது நிஜம்தான். அந்த ஆபீசிலே மானேஜர் ஜெனரலா வேலை பார்த்து வந்த, ஒரு தொரைக்கு, ஆமவடை மோர் குழம்புன்னா ரொம்பப் பிடிக்குமாம். அனந்தாச்சாரி இலேசுப்பட்டவரோ! இதைத் தெரிஞ்சுண்டு, வாரம் தவறாமே, தொரைக்கு ஆமவடை மோர் குழம்பு சப்ளை செய்துண்டு வந்தார் – உத்தியோகம் மளமளன்னு உயர்ந்தது'' என்று விளக்கமளித்தாள். ''அதுபோல உனக்கு இருக்கிற மேலதிகாரிக்கு எதன் மேலே பிரியம்னு தெரிஞ்சுக்கோ – நாமும் அனந்தாச்சாரி ஆத்திலே செய்தது போலச் செய்வோம். . .'' என்று காமினி கேலி செய்தாள். ''என்னோட மேலதிகாரிக்கு உன்னோட மூக்கைக் கடித்துத் தின்னோணும்னு ஆசையாம் – ஏற்பாடு பண்ணட்டுமா?'' என்று பதிலுக்குக் கேலி செய்தான் கச்சாபகேசன். ''போதும், போதும், விளையாட்டு; பொறப்படு. . .'' என்று பெருந்தேவித் தாயார் கூறி, சகுனம் பார்த்து, பிள்ளையை ஆபீசுக்கு அனுப்பினார்கள்.

''நம்ம வியாபாரம் செழிப்பாக நடந்தபோது என் கையாலே, இருநூறு ரூபாய் சம்பளம் கொடுத்தேன் எட் கிளார்க்குக்கு. இப்ப, என் மகனுக்கு நாற்பத்தி ஐந்து சம்பளம்...'' என்று கூறிச் சங்கடப்பட்டார், சகலகுண நாயுடு – பலசரக்கு மண்டி வியாபாரியாக இருந்து நஷ்டப்பட்டு, பழைய பேப்பர் கடை நடத்திக் கொண்டு வந்தவர்.

''ஏதோ, கண்ணைக் கொடுத்த தெய்வம், கோலைக் கொடுத்தது போல, நமக்கு இவ்வளவு கஷ்டமும் நஷ்டமும் ஏற்பட்ட பிறகாவது, நமது மகனுக்கு, ஒரு ஆபீசிலே உத்யோகம்

கிடைச்சுதேன்னு பகவானை பூஜிக்க வேணுமுங்க. சம்பளம் குறைவா இருந்தா என்னங்க கௌரவமான பிழைப்பு. நாலு பேர் கேட்டா, மதிப்பாத்தான் பேசுவாங்க. எதுவோ அவன் கொண்டு வருவதை வைத்துக் கொண்டு, ராமா! கிருஷ்ணா! கோவிந்தான்னு காலட்சேபம் செய்யலாமே'' என்று சமாதானம் பேசினாள் அவர் மனைவி உமையாள். கோட்டுப் பொத்தான்களை சரிப்படுத்திக் கொண்டிருந்தான் கோதண்டபாணி பி.ஏ.

கச்சாபகேசன் பி.ஏ., கோதண்டபாணி பி.ஏ; இருவருக்கும் ஒரே நாளில், ஒரே ஆபீசில், ஒரே அந்தஸ்தில், கிளார்க் வேலை கிடைத்தது. இருவரும் சென்றனர். ஒருவருக்கொருவர் கல்லூரியில் ஓரளவுக்கு அறிமுகமானவர்கள்தான். கோதண்டபாணி அப்போது செல்வவான் வீட்டு மகன், எனவே குருக்கள் பிள்ளைக்குச் சினிமா, டிராமா ஓட்டல் செலவுகளுக்குத் தாராள மாகப் பணம் கொடுப்பதும் உண்டு.

''கோதண்டனா''

''கச்சாபி இங்கேதானா நீயும்''

''ஆமாம்! இந்த ஆபீசிலே உள்ளவா, நாம் இருவரும் பிராண சிநேகிதா என்பதைத் தெரிந்து வேலை கொடுத்தா போலிருக்கு''

''ஏதோ இந்த வேலையாவது கிடைச்சுதே, அதைச் சொல்லு. எனக்கு எங்காவது சிலோன், சிங்கப்பூர் ஓடி விடலாமான்னு தோணினது உண்டு. நீயும் இவ்வளவு நாளா, வெட்டிச் சோறுதானா?''

''நானா? ஏண்டா, நான் வெட்டிச்சோறு தின்னேனோணும். அப்பாவுக்கு உதவியா, கோயில் காரியத்தைக் கவனிச்சுண்டு இருந்தேன்.''

இருவரும் இவ்வளவு பேசத்தான் நேரம் கிடைத்தது. இதற்குள் ஆபீஸ் தாழ்வாரத்தில் அவர்களை உட்காரச் சொல்லிவிட்டு பேசாதே என்று உத்தரவும் போட்டு விட்டான். கரன்சிங் – அகதியாக வந்ததால் அட்டெண்டரானவன்.

உள்ளே உலகநாத முதலியார் படாதபாடு பட்டுக் கொண்டிருந்தார் – புதிதாகக் கிளார்க் வேலைக்கு வந்துள்ள இருவர்களில், யாரை எந்த செக்ஷனில் போடுவது என்பது அவர் தலைமீது விழுந்துவிட்டது.

இருந்ததோ, இரண்டு முக்கியமான செக்ஷன்கள். ஒன்றில் இவர்தான் மானேஜர், மற்றோர் செக்ஷனில் மாதுர்பூதம் மானேஜர்.

கச்சாபகேசன் பி.ஏ. பிராமணப் பையன்—அவனை மாதுர்பூதத்திடம் அனுப்பி விடுவதுதான் நல்லது என்று ஒரு விநாடி எண்ணினார். மறு விநாடியோ, ஏன்யா! மிஸ்டர் முதலியார்! உமக்கென்ன பிராமப் பூண்டே பிடிக்காதோ? என்று மாதுர்பூதம் கேட்டு விடுவார் என்று திகில்.

மாதுர் பூதம் அதுபோல வேடிக்கையாகப் பேசும் பாவனையிலேயே, விபரீதங்களைக் கொட்டுபவர். சரி! நம்ம செக்ஷனிலேயே வைத்துக் கொள்வோம் என்று எண்ணினார்; மறு நிமிஷம், வாட்டம் சாட்டமா கிடைத்தான் பாப்பான்னு முதலியார் அங்கே போட்டுண்டார் போலிருக்கு என்று பேசுவார்; வம்புக்காரன் இந்த மாதுர் பூதம்—என்பதை எண்ணிக் குழம்பினார்.

கடைசியிலே, கோதண்டபாணியைத் தமது செக்ஷனிலேயே போட்டுவிட்டு, கச்சாபகேசனை, மாதுர்பூதத்துடன் அனுப்பினார்.

பத்துநாள் வரையில், புதிய கிளார்க்குகள் பற்றி இரண்டு மேலதிகாரிகளும், கவனிப்பு செலுத்த வேண்டிய அவசியம் எழவில்லை.

மாதுர்பூதம், அடிக்கடி உலகநாதர் அறைக்குச் சென்று பேசுவார் – உலக விஷயம்பற்றி.

''அடெ, இதைக் கேளுமய்யா, என்னமோ, ஆபீசைத் தூக்கித் தலைமேலே வைச்சுண்டு ஆடறீர் இன்னய இந்துவைப் பார்த்தீரோ?''

''இல்லையே...என்ன விசேஷம்....''

''அடடே! நான் மறந்தே போனேன். நீர்தான் 'இந்து'வைத் தொடமாட்டீரே. . .''

''ஏன் அப்படிச் சொல்கிறீர். எனக்கென்ன 'இந்துவிடம்' வெறுப்பு. கோபம், நேரம் கிடையாது. உம்மைப்போல சாவகாசமாக பேப்பர் படிக்க. . .''

''பார்த்தீரா, பார்த்தீரா! குத்தலாகத்தானே பேசறீர். நீர்தான் ஆபீஸ் வேலையை அக்கறையோடு கவனிக்கிறீர் – நான் பேப்பர் படிச்சுண்டு, காலந்தள்ளிண்டு, வெட்டிச் சம்பளம் 'வாங்கிண்டிருக்கேன். ஏன்யா, முதலியார்! முதலியார்வாள்! அதுதானே உம்மோட நினைப்பு?''

''வக்கீலா போயிருக்க வேணுமய்யா நீர். ஒண்ணு சொன்னா ஒன்பத்தெட்டு அர்த்தம் செய்துண்டு, 'கிராஸ்' செய்கிறீர். . .''

''போகட்டும். . . இன்று 'இந்து' விலே உம்மோட லீடர் பேச்சு வந்திருக்கு. அதனால்தான் பார்த்தீரோன்னு கேட்டேன்...''

''அதென்னய்யா, புதுசா வெடிகுண்டு போடறீர், என்னோட லீடர், உம்மோட லீடர்னு. . . எனக்கு யார் லீடர்?''

''சர். ஏ. இராமஸ்வாமி முதலியார். . .''

''அவர் ஏன், எனக்கு லீடர் ஆகிறார். . . அவர்களெல்லாம் அரசியல்வாதிகள். . . நமக்கும் அவர்களுக்கும் என்னய்யா சம்பந்தம்?''

''ஊமக்கு இருக்கோ இல்லையோ, சர். இராமசாமி அப்படி இருப்பதாகச் சொல்கிறார். . .''

''என்னண்ணு! உலகநாதனுக்கு நான் லீடர்னு சொல்றாரா?''

''உலகநாதனுக்கு மட்டுமா, உத்தண்டன், கோதண்டன், கந்தன், காத்தான், காட்டேரி, காவேரி இப்படி உள்ளவர்களுக்கெல்லாம், அதாவது பார்ப்பனர் அல்லாதவருக்கெல்லாம், அவர் தான் லீடராம்!''

''அதென்ன கர்மமோ! நமக்கேன் வீண் வம்பெல்லாம்''

''முதலியார்! மனதிலே இருக்கறதை மறைக்கறீர். . . நிஜமாகச் சொல்லும், உம்மோட அபிப்பிராயத்தை, சர். இராசாமி, பெரிய மேதாவி என்பதுதானே உம்மோட எண்ணம்? நீரே அதுபோலச் சொல்லியிருக்கிறீர், என் காதாலே கேட்டிருக்கேன். . .''

''ஏன்யா! அவரை மட்டுமா சொன்னேன். சர்.சி. பி. இராமசாமி ஐயரைக் கூடத்தான் புகழ்ந்து பேசியிருக்கேன். . .''

''ஆப்டிண்டீர், முதலியார்வாள், தானா ஆப்டிண்டீர். என்ன சொன்னீர், என்ன சொன்னீர், இராமசாமி ஐயரைக் கூடத்தான் புகழ்கிறீரா? கூடத்தான். . . கூடத்தான். . . அதிலேயே தெரியறதே உம்ம மனசிலே, பிராமணா மேலே இருக்கற துவேஷம், விரோதம், வெறுப்பு, எல்லாம், ஸ்பஷ்டமா. . .''

''இப்படி வாயைக் கிளறி, வம்பான அர்த்தம் செய்து என் வயித்தெரிச்சலைக் கொட்டிக் கொள்ளாதே. ஆபீஸ் விஷயமாகப்

பேசு, ஆனந்தமா, உம்ம வீட்டிலே உள்ள க்ஷேம லாபம் பற்றிப் பேசுமே. . . எதுக்காகய்யா, பாலிடிக்ஸ் பேசணும். . .''

''எதையும், உள்ளுக்குள்ளே வைச்சிண்டு, கழுத்தறுக் கறதைவிட, வெளிப்படையாக பேசறது நல்லது என்பது என் கொள்கை, தெரியறதோ. . . மாதுர் பூதம் வம்புக்காரன் என்று பேசுவா. . . நீரே அப்படித்தான் பேசறதாகக் கேள்விப்பட்டேன். கவலையில்லை...மனதிலே பட்டதைப் பேசுவது என் வாடிக்கை....''

''அது நல்லதுதான். . . ஆன நான் எதையும் மனதிலே ஒளிய வைத்துக்கொண்டு இல்லை. எனக்கு பிராமணாள் – பிராமணரல்லதார் என்று எந்த பேதமும் கிடையாது, அது ஒரு பிரச்சினை என்ற எண்ணமும் ஏற்பட்டதில்லை.''

''அப்படியானா, உமக்கு இருவரும் சமம். பிராமணாள் பிராமணரல்லதார், இருவரையும் ஒரேவிதமாகத்தான் பாவிக்கிறீர்?''

''ஆமாம். . . எதற்காகப் பேதம். . . விரோதம். . . குரோதம்?''

''சுருக்கமாகச் சொல்லோணுமானா ஏண்டா! பாப்பாரப் பசங்களா! நீங்கள் என்ன உசத்தியா எல்லாம் ஒண்ணுதானேடா? என்று கேட்கிறீர். . . இருவரையும் சமமாகப் பாவிக்கிறேன் என்று சொன்னா இதுதானே அர்த்தம்?''

''சிவ, சிவா! என்னா மூளையய்யா உனக்கு. . . அர்த்தத்தை அனர்த்தமாக்கி. . . இதோ பாரும், வீண் வெட்டிப் பேச்சு நமக்கு எதுக்கு? எந்த லீடராவது எதையாவது சொல்லிக் கொண்டு போகட்டும், நம்ம லீடர் இருக்கானே மேலே, அவன் இன்னும் இருபத்து நாலுமணி நேரத்திலே ஆறு மாதத்துக் கணக்கை ஒழுங்காக்கிக் கொண்டு வாடான்னு உத்தரவு போட்டிருக்கான், உயிர் போகுது அதை முடிக்க, நீர் வேறு தொல்லை செய்யாதீர்...''

''வாயாடி பாப்பான், வம்புக்காரப் பாப்பான், வேலையைக் கெடுக்கற பாப்பான் என்பதை, மறைபொருளாகச் சொல்றீர். . . அதுதானே. . .''

''அட ராமா! ராமா! ஏன்யா உனக்கு, எதிலுமே, நேரான அர்த்தம் கிடைக்காதா. . .''

இவ்விதம் இருக்கும் உரையாடல்.

மாதுர்பூதம் தாராளமாகவும், தீவிரமாகவும், அரசியல் பிரச்சினைகளை அலசுவார் – முதலியாரை வாதத்துக்கு இழுப்பார் – பெரிய தலைவர்களின் தவறுகளை அஞ்சாமல்

கண்டிப்பார்–அதிலும் குறிப்பாக, பார்ப்பனரல்லாதார் இயக்கம் என்றால், அதைக் கண்டித்துப் பேசுவது அவருக்கு சித்திரா பௌர்ணமியில் சிங்கார ஆற்றுமணலில் உட்கார்ந்து கொண்டு சித்திரான்னம் சாப்பிடுவது போல! அவ்வளவு சுவை!!

எந்தப் பேச்சின்போது எதைச் சொல்லி, சிக்கிக் கொள்கிறோமோ, என்ற பயம் முதலியாருக்கு, இருவரும் ஒரே அந்தஸ்தான உத்யோகம்தான் – எனினும், நடுங்குவார் உலகநாதர், மாதுர்பூதம் அப்படியல்ல.

அவன் இடியட்

இது நான்சென்ஸ்

அவன் ஒரு ஃபூல்!

இவனெல்லாம் நாக்குப் புழுத்துச் சாவன்! என்றெல்லாம், எடுத்தேன் கவிழ்த்தேன் என்று பேசுவார், பார்ப்பனரல்லாதார் இயக்கத்தினரை – அவர்கள் எவ்வளவு உயரிய இடத்தில் இருந்தாலும்.

சுடுமூஞ்சு – என்று உலகநாதருக்குப் பெயர் வந்தது.

அறிவாளி – என்று மாதுர்பூதத்துக்குப் பெயர்.

ரொம்ப மந்தம் – காலையிலே பத்து மணிக்கு வேலையை எடுத்தால், மாலை ஆறு மணிக்கும் முடியாது. எட்டு மணிகூட ஆகும், அவ்வளவு அசமந்தம் சார், உலகநாதர் என்பார்கள்.

எவ்வளவு சுறுசுறுப்பு தெரியுமோ, மாதுர்பூதம்? ஆபீஸ் வேலையை அரைமணி நேரத்தில், மளமளன்னு, முடித்துவிடுவார், மாலையில் ஒரு சங்கீதக் கச்சேரி, நாட்டியக் கச்சேரியை விட மாட்டார். வேலையிலே நிபுணன். கட்டைப் பார்த்தும், புரிந்து கொள்வார். எவ்வளவு பெரிய விஷயமானாலும் சரி, மனதைப் போட்டுக் குழப்பிக் கொள்ளமாட்டார் – சூஷ்மம் அதிகம் – என்று மாதுர்பூதத்துக்குப் புகழ் கிடைக்கும்.

''எல்லாம் எனக்குத் தெரியும். எனக்குத் தெரியாத விஷயமே கிடையாதுன்னு, பிரதாபம் பேசறீரே, உம்மோட ஆபீஸ் விஷயத்திலேயே ஞான சூன்யமா இருக்கிறே, செச்சே! என்ன மனுஷத் தன்மை இது?'' என்று படபடவென்று பேசினாள் பகவதி – மாதுர் பூதத்தின் பார்யாள் – இரண்டாந்தாரம்.

''என்னடி அம்மா, எனக்கு எதிலே ஞான சூன்யம்?'' என்று கொஞ்சினார் மாதுர்பூதம்.

''போதும் பால்யம் திரும்பறதோ?'' என்று கூறிக் கொண்டே, மாதுர் பூதத்தின் கைக்குத் தன் கன்னத்தில் இட மளித்தபடி, பகவதி கேட்டாள்.

''உம்ம ஆபீசிலே யாரார் வேலை செய்கிறான்னுகூட உமக்குத் தெரியறதில்லையா? இதைக்கூடத் தெரிந்து கொள்ளாமப் படிக்கு, என்ன வேலை பார்க்கிறீராம்.''

''என்னடி, ஜெனரல் மானேஜர் வேலை பார்க்கறே. அவன் கூட என்னை அவ்வளவு தைரியமாகக் கேட்க மாட்டான்.''

''போறது. உம்ம செக்ஷனிலே புதுசா ஒரு பிள்ளை யாண்டான் வேலைக்கு வந்திருக்கானே. . .''

''ஆமாம். . . பத்து நாளாறது. . . கிணத்துத் தவளை போல இருக்கான்.''

''கிணத்துத் தவளையோ, குளத்துத் முதலையோ, கிடக்கட் டும். அவன் யாருன்னு தெரிஞ்சிண்டீரோ, பிராமணப் பையன் என்பதாவது தெரிஞ்சுதோ. . .''

''அதுகூடவாடி தெரியாது. அது தெரிஞ்சதாலேதான் அவனோட தப்பு இங்கிலிஷை எல்லாம் நானே திருத்தி, அவன் மானத்தை வாங்காம இருந்தேன்.''

''அவன் யார்னு தெரியாதா?''

''யார் ஆத்துப் பையன்?''

''போன வருஷம், நம்ம ஆத்திலே நவராத்திரி கொலுவின் போது ஒரு பொண்ணு வந்து பாடினாளே, மாநிறமா – ஒல்லியா...''

''எத்தனையோ குட்டிகள் வந்தா, பாட, ஆட. . . யாருக்கு கவனமிருக்கு. . .''

''இவ, சுருட்டை மயிர்...ரொம்ப துடிப்பா பேசுவா. . . உம்மை ஒரு நூறு தடவை இருக்குமே மாமா! மாமான்னு கூப்பிட்டது.''

''ஆமா. . . இவளெல்லாம் என்னை மாமான்னு கூப்பிட்டு விட்டா, என்னோட மனசு மகிழ்ந்துவிடும் போலிருக்கு. . .''

''உம்மோடு மனசு மகிழ அதுபோதுமா? நேக்குன்னா அது தெரியும். கிடக்கு, அந்தப் பொண்ணு பேரு, காமினி. . . நமக்கு ரொம்ப வேண்டியவா. . . இந்தப் பையன், அவளோட அண்ணன் பி.ஏ.''

“அப்படியா? அசட்டுப் பய, என்னண்டை நேரா நின்று கூடப் பேசறதில்லை. வெட்கமானாலும் இப்படியா?”

“இப்படி வீட்டுக்கு வரக் கூடாதுங்க நாயுடு சார்! நீங்க பெரிய அந்தஸ்திலே இருந்தவர், உம்மோட மனசு புண்படும்படி நான் பேசுவதாக எண்ணிக் கொள்ளக்கூடாது.

பொதுவாகவே, காலம் இப்ப ரொம்பக் கெட்டுக் கிடக்குது. உம்ம மகன், என் செக்ஷனிலே இருக்கிறாதலே, என்னை வந்து பார்த்தா, ஊர் உலகம் தப்பாப் பேசும், நாயுடுவும் முதலியாரும் சினேகம் – ஏதோ கையை நீட்டி யிருப்பார் முதலியார்–பையன் அவரண்டைதானே வேலை செய்கிறான் என்று பேசும், நமக்கு ஏன் இந்த வம்பு. ஆபத்தாகக்கூட முடியும். அதனாலே தயவு செய்து, இனிமேல், என்னிடம் வந்து பேசறவேலையை விட்டு விடுங்க... நான் நித்ய கண்டம் பூர்ணாயுசுன்னு ஆபிசிலே காலந்தள்ளிக் கொண்டு வருகிறேன். . . ஐந்து வருஷமிருக்கு. பென்ஷனுக்கு, அதன் வாயிலே மண்ணைப் போட்டு விடாதிங்க. மேலும் பேசத்தான் என்ன இருக்கு? உங்க மகன் கோதண்டபாணிக்கு ஒரு அஞ்சோ பத்தோ சம்பளத்தை உயர்த்த அதிகாரம் எனக்கா இருக்கு. . .”

“முதலியார்வாள்! மன்னிச்சிடுங்கோ. நான் இப்படி நடக்கும்னு சொன்னேன். எங்க வீட்டுக்காரி வம்பு செய்ததாலே, வந்தேன், இனி வரமாட்டேன், பகவான் விட்ட வழிப்படி நடக்கும்.”

“பகவான் உமக்கு ஒரு குறையும் வைக்கமாட்டான். பிள்ளையாண்டானும் ஒழுங்கானவன். . . அது எனக்குப் பரம திருப்தி. . . ஆனா அதை நான் வெளிப்படையாகச் சொன்னால்கூட விபரீதமான வியாக்யானம் செய்து விடுவாங்க. இவர்களெல்லாம், பார்ப்பனரல்லாத சமூகம், ஒரே இனம், இனம் இனத்தோட சேருது, அப்படி இப்படின்னு சொல்லி, என் தலைக்குத் தீம்பு தேடுவாங்க”

“ராம! ராம! என்னாலே உங்களுக்கு அந்தக் கஷ்டம் வர வேணாமுங்க. நான் உங்களண்டை வந்ததே, பையனுக்கு உத்யோகம் உயரவேணும் என்கிறதுக்காக அல்லங்க. இந்தக் காலத்திலே அவங்கவங்க காரியத்தை அவங்கவங்க பார்த்துக் கொள்வதே பிரம்மப் பிரயத்தனமா இருக்குது.

தெரியாதுங்களா பல நாளா தெரிஞ்சவராயிருந்தும், ஒரு நாளாவது என்னை வந்து பார்த்தாரா நாயுடு, மகன் வேலையில்

இருக்கிறான், பார்த்துக் கொள்ளுங்கன்னு வந்து சொன்னா இவனோட அந்தஸ்த்தா கெட்டுப் போகும்னு, நீங்க ஒரு காலத்திலே சொல்லக்கூடாதே என்பதற்காகத்தான் வந்தேன் – வேறே ஒண்ணுமில்லிங்க.

''எனக்கு உங்களோட மட்டு மரியாதை. கௌரவம் அந்தஸ்து, இதெல்லாம் தெரியாதா நாயுடு. அபிமானம் இல்லாமலா போகும். எல்லாம் மனசுக்குள்ளே இருக்கு, வெளியே கொட்டி னாத்தானா, இருதயத்திலே இருந்தாப் போதாதா. . .''

''அதுபோதுமுங்க, முதலியார், ஆயிரம் ரூபாச் சம்பளம் என் மகனுக்குக் கிடைச்சாக்கூட இந்த ஆனந்தம் ஏற்படாது. வரேனுங்க.''

மாதுர் பூதத்திடம் இளையான், கச்சாபகேசனைக் குறித்து கனிவாகச் சிபாரிசு செய்திட, சகலகுண நாயுடுவிடம் உலகநாத முதலியார், ஆபீஸ் விஷமாகத் தன்னை வீட்டில் கண்டு பேசுவதே தவறு என்று அச்சத்துடன் கூறி அனுப்பிவிட்டார். அக்கரையோ நல்லெண்ணமோ காட்டுவது தன் வேலைக்கே ஆபத்தாகிவிடக் கூடும் என்ற அளவுக்கு அவருக்கு நடுக்கம். மாதுர் பூதத்துக்கு என்ன!! மறுநாளே இளையாளின் கனிமொழி பலன் தரலாயிற்று.

''டே, பூல்! இங்கே வாடா. . .''

''என்ன சார்!. . .''

''நீ, பிராமணன் தானே? ஏண்டா இடியட், பிராமணப் பையன்தானே. . .''

''என்ன சார்! இப்படிக் கேட்கிறீர். . . என்ன சந்தேகம் உமக்கு. . . பிராமணன்தான். . .''

''பிரமணணா இருந்தும் ஏண்டா, புத்தி உனக்கு இவ்வளவு கட்டையா இருக்கு, இங்கே பத்து நாளாக வேலை பார்க்கறயே, நான் பிராமணன்னு சொல்லப்படாதோ. . . என்னண்டை வந்து பேசியிருக்கலாமேன்னோ. . . ஏண்டா! எப்படிப் பிழைக்கப் போறே?''

''கொஞ்சம் கூச்சமாக இருந்தது. . .''

''கூச்சமா? எதுக்காகடா. . . மண்டு! மண்டு! தோப்ப னாருக்கு என்ன வேலை?''

''தோப்பனார். . . அவர். . . அவருக்கு. . .''

''என்னடா தயக்கம்? என்ன வேலையா?''

''கோயிலிலே குருக்கள். . .''

''அட அசடே! அதைச் சொல்றதிலே வெட்கம் ஏன்? ஏண்டா. வெள்ளைக்காரன், தன்னை பிஷப், பாதிரின்னு சொல்லிக் கொள்ள வெட்கப்படுவானோ! நாம் ஏன், அர்ச்சகர் வேலையைச் சொல்லிக் கொள்ள வெட்கப்படணும்.''

''இந்தக் காலத்திலே மதிப்பு கிடையாதேன்னுதான். . .''

''மதிப்பு உண்டாக்கணும்டா மண்டு! உண்டாக்கணும். இலட்ச இலட்சமாச் சம்பாதிக்கிற சீமானா இருந்தாலும், நூற்றுக் கணக்கானவர்களுக்கு எஜமானாகி ஆயிரக்கணக்கிலே சம்பளம் வாங்கிண்டு அதிகாரம் செலுத்துபவனா இருந்தாலும் உன்னோட தோப்பனாரோட தயவை நாடித்தானே தீரணும். . . பிறகுதானே தரிசனமே கிடைக்கறது. ஏனடா! அப்படிப்பட்ட உத்தமமான 'சேவை' யிலே இருக்கார், அதைப் பெருமையோட சொல்றதா, வெட்கத்தோடு முணுமுணுக்கறதா? உன்னைப் போன்றதுகளைப் பார்த்துத்தான், அவனெல்லாம், மடி சஞ்சி, உஞ்சி விருத்தி, உச்சிக் குடுமி என்றெல்லாம் கேலி பேசறான். இனி, தோப்பனாரோட வேலையைத் தாழ்வானதுன்னு எண்ணிண்டு திரியாதே.''

''இப்படிப்பட்ட மேதா விலாசம் பல பேருக்கு இல்லையே, சார்! கேவலமான்னா பேசறா. . .''

''பேசுவா, பேசுவா! இந்த ராஜாஜி மட்டும் அனாவசியமா ஒரு கல்வித் திட்டம்னு கொண்டு வந்து வம்பை விலைக்கு வாங்காமப்படிக்கு, இன்னும் ஒரு பத்து வருஷம் ராஜ்யத்தை ஆண்டிருந்தாரானா தெரிஞ்சிருக்கும். பிராமணத் துவேஷிகள் பாடு! உம்! என்ன செய்யறது? மகா ஞானஸ்தர்தான். ராஜாஜி! முன்யோசனையில்லாமல் நடந்துண்டார். மூலையிலே கிடக்க வேண்டியதுகள் முடி சூட்டிண்டு கிளம்பிட்டதுகள்.''

''ஆமாம், சார்! நம்மவா ரொம்பப் பேர் சோகமாகத் தான் இருக்கா, ராஜாஜி விலகினதும். . .''

''ஆமாம். . . சரி. . . இப்ப உனக்கு நான் என்ன செய்ய முடியும். . .''

''எனக்கு ஒரு குறையும் இல்லை சார். . .''

''குறை இல்லைன்னா போதுமா? அங்கே பர தேவதை கொறடா போடறாளே! நம்ம காமுவோட அண்ணன் வேலையிலே இருக்கான், கவனியுங்கோன்னு சொல்றா. . ஆர்டர் போட்டாச்சே. . .''

''ரொம்பச் சந்தோஷம், சார்... நான் பார்த்தது கூட இல்லே...''

''என் வயசுதான் இருக்கும் அவளுக்குன்னு சொன்னா... உன்னை அவ பார்த்திருப்பா போலிருக்கு. . . சரி உனக்கு நான் ஏதாவது செய்ய வேணுமானா, முதலிலே, உன்னை என் செக்ஷனைவிட்டுக் 'கல்தா' கொடுத்தாகணும்.''

'ஐயயோ! என்ன சார் இது, உதவின்னு சொல்லிவிட்டு, 'கல்தா' கொடுக்கணும் என்கிறீர்.

''ஆமாம்டா! என்னண்டை உன்னை வைத்திண்டு உனக்குச் சலுகை காட்டினா, பாப்பானுக்குப் பாப்பான் உதவி செய்துண்டான்னு பழிச்சுப் பேசுவா. இப்பத்தான் சூரப்புலிகள் பிராமணாளை ஒழிக்க நடத்தறாளே. . .! அதனாலே, நாளையிலேயிருந்து, நீ, உலகநாத முதலி செக்ஷனிலே வேலை செய்யவேணும் – ஏற்பாடு செய்துடறேன்...''

''அவர் சுடுமூஞ்சின்னு எல்லோரும் பேசிக் கொள்றா. . .''

''அவனோட மூஞ்சியைப் பத்தி நீ ஏண்டா கவலைப் படறே... அவன் ரொம்பப் பயந்த பேர்வழி. . . பிராமண்னன்னா வெகு பயம். . . அதனாலே உன்னண்டை வாலாட்டவே துணிவு வராது. நீ அவன் செக்ஷனிலே வேலை பார்த்துண் டிருக்கும்போது, சமயமறிந்து, நான் அவனைக் கொண்டே, சிபார்சு செய்யச் சொல்கிறேன்''

''சரி சார்!. . .''

''என்னடா இது அடிக்கொரு தடவை சார்! போடறே. காமினி, எப்படி, வாய்நிறைய, மாமா, மாமான்னு கூப்பிடறா தெரியுமோ. . .?''

''சரி, மாமா. . .!''

''சபாஷ்டா, மருமானே! ஆனால் ஒண்ணுக்கு, இரண்டு கலியாணம் செய்தும், குழந்தைதான் கிடையாது. . . சும்மா மருமான் தான். . . பெண் கிடைக்கும்னு எண்ணிண்டு, மாமான்னு கூப்பிடாதே. . .''

''உலகநாத முதலியார், இதுபோல, இனிமையாகப் பேசி மகிழவுமில்லை, கோதண்டனை மகிழ்விக்கவுமில்லை. சகலகுண நாயுடுவின் மகன் என்ற ஒரே காரணத்தாலேயே, கோதண்டனைப் பார்த்துப் பேசுவதேகூட ஆபீஸ் முறைக்கு,

ஒழுங்கல்ல, ஆபத்தை, வதந்தியை, கெட்ட பெயரைக் கிளப்பிவிடும் என்று அஞ்சினார். எனவே, கோதண்டனைக் கலந்து பேசக்கூட இல்லை, மறுநாளே. மாதுர்பூதம் செக்ஷனில் வேலை செய்யும்படி உத்தரவு பிறப்பித்துவிட்டு, ஒரு ஆபத்திலிருந்து தப்பித்துக் கொண் டோம் என்றெண்ணிக் கொண்டார்.

மறுநாள், கோதண்டன் மாதுர்பூதத்தின் மேற்பார்வையில் வந்து சேர்ந்தான்; கச்சாபகேசன் உலகநாத முதலியாரைக் கண்காணித்து வரத் தொடங்கினான்.

''மிஸ்டர் கச்சி!. . .''

''சார்! கொச்சையாக அழைத்தால் எனக்குப் பிடிப்பதில்லை. கச்சாபகேசன் என்றே கூப்பிடுங்கள்.''

''ஆகட்டும். . . லெட்ஜர் பழக்கமாகி விட்டதா?''

''இல்லையே...எனக்கு அதிலே டேஸ்ட்டே கிடையாது. . .. கரஸ்பாண்டென்சுதான் எனக்குத் தகுந்தவேலை என்று மாதுர்பூதமே சொல்லியிருக்கிறார்.''

''அப்படியா? அவருக்கு யாருக்கு என்னென்ன வேலை தரவேண்டும் என்பது சட்டென்று தெரிந்துவிடும், மகாசூட்சமப் புத்திக்காரர். . .''

''நீங்ககூட, சற்று சுறுசுறுப்பாகவும், தைரியமாகவும் வேலை செய்தால், ஆபீசின் தரம் உயரும் என்று மாதுர்பூதம் அடிக்கடி சொல்வார், சார்!''

''அப்படியா? சரி, சரி வேலையைக் கவனி. . .''

இப்படி உலகநாதர் கச்சாபகேசன் தொடர்பு துவக்கப் பட்டது.

''**கோ**தண்டன். . .? யாரடப்பா அது! நீயா? ஆமாம் கோதண்டன் என்றால், என்ன கோனாரா செட்டியாரா, முதலியாரா, ரெட்டியாரா; ஒரு இழவும் போடக் காணோமே. . .''

''நாயுடு சார். . .''

''ஓஹோ! நாயுடுகாரா! அடேடே! ராஜ்யமாண்ட பரம்பரை ஆச்சே! நீ எப்படி என்னிடம் அடங்கி ஒடுங்கி வேலை செய்யப் போகிறே?''

''அப்படியெல்லாம் இல்லை சார்! உலகநாதர் செக்ஷனிலே விசாரித்தால் தெரியும். . .''

''உலகநாதர், உங்களவர் அப்பா. . . நான் பிராமணன்... பாப்பானாச்சே! என்னண்டை அடங்கி ஒடுங்கி வேலை பார்த்தா சுயமரியாதை கெட்டுப் போகும்.''

''உனக்குக் கிடையாது. . . சரி. . . ஆனா, அப்படிப்பட்ட எண்ணம் இப்ப, நாட்டிலே பேசப்பட்டு வர்ரது தெரியுமேன்னோ?''

''தெரியும், சார்!''

''தெரியுமா? எப்படி? ஏண்டாப்பா, கோதண்டம், நீ அந்தக் கூட்டத்தோடு தொடர்பு வைத்துக் கொண்டிருப்பவனோ?''

''இல்லை சார், எனக்கு யாரையும் தெரியாது. . .?''

''அதுவரையில் க்ஷேமம். . . இதோ பார், நான் எப்பவும் சிரித்துப் பேசிண்டு இருப்பேன். . . ஆனா, துளியாவது உன்னண்டை அந்தச் சுயமரியாதை என்கிறது தெரிந்ததோ, தொலைத்து விடுவேன் தொலைத்து, ஆமாம். . . என்ன பேப்பர் படிக்கிறே?''

''யார் சார், நானா?''

''உங்க அப்பன்? சுத்த முட்டாளா இருக்கறயே, உன்னைத் தானே கேட்பேன், என்ன பேப்பர் படிக்கிறேன். . . னா. . .''

''ஒண்ணும் இல்லை, சார்!''

''ஏன், எல்லா ஞானமும் பி.ஏ். வோட கிடைத்து விட்டதா! பேப்பர்கூட படிக்கறதில்லையா?. . .''

''எதிர் வீட்டிலே, இந்து வரும், படிப்பேன் சார், சனி, ஞாயிறு. . .''

''எதிர் வீட்டிலே, யார் இருக்கா?'

''என்.வி. நடராஜன்னு ஒருத்தர். . ..''

''யார், அந்த அரட்டையா? ஆரியன் திராவிடன்னு பேசுவானே, அவனா?''

''ஆமாம், சார்!''

''அப்போ, ஆரியன் திராவிடன் என்கிற விஷம் உனக்கும் ஏறி இருக்குன்னு சொல்லு. . .''

''இல்லே, சார்! நான் அவரண்டை அதை எல்லாம் பேசறதில்லை.''

''ஏனாம்?''

''அவர்களெல்லாம் நிறைய விஷயம் தெரிந்தவர்கள், நான் என்ன பேச முடியும்?''

''அவர்களெல்லாம் நிறைய விஷயம் தெரிந்தவர்களா? அல்லாடியா? அல்லது டி.டி.கே.யா? திமிரைப் பார், திமிரை அவர்களெல்லாம், நிறைய விஷயம் தெரிந்தவர்களாம்! என்னடா தெரியும் அந்தப் பயல்களுக்கு? ஆரியன் – திராவிடம் - பார்ப்பன சூழ்ச்சி – வடநாட்டு ஆதிக்கம் இப்படி வரட்டுக் கூச்சல்போடத் தெரியும் – வேறென்ன தெரியும் – சரித்திரம், பூகோளம், ஞானம், விஞ்ஞானம், என்ன தெரியும்?''

''ஆமாம், சார். . .''

''அவர்களுக்கு இதெல்லாம் தெரியாது என்பது உனக்குத் தெரியுமே, அவர்களைக் கண்டித்திருக்கிறாயோ–எப்போதாவது?''

''இல்லை, சார்!. . .''

''ஏன், கண்டிக்கப் போறே! இரத்தபாசம்!''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை சார். எனக்கு அரசியலே தெரியாது. . . தெரிந்து கொள்ளும் ஆசையும் கிடையாது.''

''நீ ஆரியனா, திராவிடனா சொல்லு?''

''சார். . .''

''என்னடா, பேந்தப் பேந்த விழிக்கறே? நீ ஆரியனா, திராவிடனா?''

''நான் ஆரியனுமில்லே திராவிடனுமில்லை''

''இரண்டும் இல்லையா? அப்படியானா, நீ என்ன, மண்ணாங்கட்டியா? மடையா! ஆரியனா, திராவிடனா? அதற்குப் பதில் சொல்லடா. . .''

''தெரியலே. . . சார். . .''

''தெரியலையா? ஆரியன் திராவிடன் என்ற பேச்சு அர்த்தமற்ற, விஷமத்தனமானது, என்று சொல்லத் தெரியவில்லையா. . . அல்லது இஷ்டமில்லையா! ஆரியன் – திராவிடன் என்று பேதம் பேசுவது தப்பு! என்று சொல்ல மனம் வரவில்லையே, உனக்கு. ஆரியர் ஆரியராக இருக்கட்டும், திராவிடர் திராவிடரா இருக்கட்டும், எந்த இழவு எப்படி இருந்தாலும்,

நாமெல்லாம் மனிதர் – முதலிலும் முடிவிலும் மனிதர் என்று சொல்லத் தெரியவில்லையா. . .''

''எனக்கெப்படி சார்! இதெல்லாம் தெரியும். . .''

''பப்பா! ஒண்ணும் தெரியாது! சரி, சரி, போ, போ நீ எவனோடாவது பேசி நாசமாகப் போ, எனக்கொன்றும் கவலையில்லை. ஆனால் ஆபீசில் ஏதாவது வாலாட்டினா, தீர்ந்தது தொலைத்துவிடுவேன், தொலைத்து – ஆமாம். . .''

முதல் தாக்குதலே மும்முரமாக இருந்தது. அதைத் தொடர்ந்து, அடிக்கடி, மாதுர்பூதம் கோதண்டனை அழைக்கும்போதே, வம்புக்கு வழி கோலுவார்.

''டே அப்பா! திராவிடா! வீரத் திராவிடா! இங்கே வா, ஏ அப்பா! தெருவிலே மோட்டாரிலே, ரங்கூன் துடைப்பம் வைத்திருக்கு. அதை எடுத்துக் கொண்டு வா. அடடே! இரு இரு. ஆரியனுக்குத் தாசனாக மாட்டேன். என்று முழக்கமிடப் போகிறாய், வாசலில் வேலைக்காரத் திராவிடன் இருப்பான், அவனை எடுத்துக் கொண்டு வரச் சொல்லு.

இதென்ன கோதண்டபாணி நாயுடுகாரு சிகப்பும் கருப்பும் துணியில்! ஒஹோ! கழகமா? டே அப்பா! கழகம்! இந்த ஆரியனிடம் நீ கைகட்டிச் சேவகம் செய்வது, உன் தலைவர்களுக்கெல்லாம் தலை இறக்கமாகுமே, ஏன் இன்னும் இங்கு இருக்கிறாய்?''

இப்படி அன்றாடம் குத்தலானார், மாதுர்பூதம் முகத்திலே கடுகடுப்பு இராது – வார்த்தைகள் ஒவ்வொன்றும், நாராசமாக இருக்கும். வேலையோ, சகலமும் கோதண்டன் தலைமீதுதான்.

சார்! லெட்ஜர், லட்சுமணன் பார்ப்பதாகச் சொன்னார்.

''ஏனாம், நாயுடுகார், என்ன செய்யப் போகிறாராம், தர்பார் நடத்தப் போகிறாரா! சிச்சீ! லெட்ஜர் நீதான் கவனிக்க வேண்டும். . .''

''கடிதங்கள்?''

''அதுவும் நீதான்! நேரம் போதவில்லை என்று மூக்கால் அழாதே. உன் வயதிலே நான், இதைப் போல மூன்று மடங்கு அதிகவேலை செய்வேன். தெரியுமா? சும்மா; ஆரியன், ஆரியன் என்று அங்கலாய்த்தால் போதுமா? புத்தி இருக்க வேணுமடா, புத்தி; போ, போ வேண்டுமானால் சில கட்டுகளை வீட்டிலே எடுத்துக் கொண்டு போய், வேலையை முடித்துக் கொண்டு வா.

என்னடா பாப்பான் கழுதையின் பேரில் பொதி சுமத்துவது போல வேலையைச் சுமத்துக்கிறானே என்று யோசனையா? இப்படி எல்லாம் கஷ்டப்பட்டால்தான். நாளைக்கு முன்னுக்கு வர முடியும், தெரிகிறதா?''

''சரி, சார். . .''

கோதண்டனின் இளமைக்குப் பெரும் சோதனை. பொறுமையும் நாளுக்கு நாள் முறிந்து கொண்டு வரலாயிற்று. பெற்றோர்களோ, ''அழ அழச் சொல்பவர்கள் தானப்பா நல்லவர்கள் - ஐயர் உன்னை நல்ல திறமைசாலியாக்கு வதற்குத்தான், இப்படி வேலை வாங்குகிறார் – தவறாக எண்ணிக் கொள்ளாதே'' என்று புத்திமதி கூறினர். நெஞ்சம் குமுறிற்று நிலைமையோ அவனை நெருப்பையும் தாங்கிக் கொண்டாக வேண்டும் என்று வற்புறுத்திற்று.

அங்கு, உலகநாதரோ, கச்சாபகேசன் செய்ய வேண்டிய வேலைகளையும் சேர்த்துத்தானே செய்து கொண்டு வந்தார். அதிக வேலை வைத்து விடுகிறான் என்று தன் மீது கச்சாபகேசன் எங்காவது புகார் செய்து விட்டால், ஆபத்தாயிற்றே என்ற அச்சம் அவருக்கு. அவனாக, அதைச் செய்யட்டுமா, இதைக் கவனிக்கட் டுமா என்று கூடக் கேட்டுப் பார்ப்பான், வேண்டாம் மிஸ்டர்! நான் பார்த்துக் கொள்ளுகிறேன் என்று கூறிவிடுவார் – கச்சாபகேசன் மனம் கோணாமலிருக்க வேண்டும் என்பதற்காக. கச்சாபகேசன் வீட்டாரோ, இதற்காக முதலியாரை வாழ்த்த வில்லை ''அந்த முதலிக்கு எவ்வளவு கெட்ட நினைப்பு, கச்சாபகேசனிடம் வேலைகளைக் கொடுத்தால், திறமை பெற்று விடுவான், என்ற பயம் அவன், ஒரு வேலைக்கும் இலாயக்கில்லை, எல்லாம் நானேதான் செய்து வந்திருக்கிறேன், என்று என்றைக்காவது பழி சுமத்துவதற்காகவே, இந்தச் சூது செய்கிறான்'' என்றுதான் சபித்துக் கொட்டினர்.

இளைஞனாகவும், பட்டதாரியாகவும், சுறுசுறுப்பான வனாகவும் ஒரு காரியதரிசி தேவை என்று கேட்டார் ஜெனரல்.

''தாமோதரத்துக்கு என்ன குறை?''

''அவனுக்கு ஒரு குறையும் கிடையாது. ஆனால் அவனோடு பேச, ஜெனரல் மானேஜருக்குச் சக்தி கிடையாதே. அவ்வளவு செவிடனாயிற்றே, தாமோதரம்''

''அப்படியானால், யாரைத்தான் சிபாரிசு செய்தீர்?''

''நானா? ஒருவரையும் சிபாரிசு செய்யவில்லை! ஆனால், அது சம்பந்தமாக முடிவுகாணும் பொறுப்பை உம்மிடம் விட்டு விடலாம் என்று சிபாரிசு செய்துவிட்டேன் — அவரும் ஒத்துக் கொண்டுவிட்டார்.''

''ஏனய்யா எனக்கு அந்த வம்பு? நான், யாரைச் சிபாரிசு செய்வது? ஏன் வீணாகப் பலபேருடைய பொல்லாப்பு?''

''பொறுப்பு மிகுந்தவர் என்று உம்மைச் சிபாரிசு செய்வதிலே எனக்கு எப்போதும் விருப்பமாயிற்றே! ஏன், சிரமப்படுகிறீர்? கையிலே வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுவது போல! அதுதான், இந்த ஆறு மாதமாக அந்தப் பயலை, கச்சாபகேசனைத் தயார் செய்து வைத்திருக்கிறீரே, அவனை சிபாரிசு செய்துவிடும். . .''

''கச்சாபகேசனையா. . .?''

''ஆமாம்! ஏன், அவனுக்கு என்ன? ஓஹோ மறந்து விட்டேனே, அவன் பார்ப்பனன்!! அதனாலே அவனுக்குத் தகுதியும் திறமையும் இருந்தாலும், சிபாரிசு செய்யக்கூடாது. . . அதுதானே...''

''இது என்னய்யா, விஷமத்தனமான பேச்சு. நான் எப்போதாவது அப்படிச் சொல்லி இருக்கிறேனா? ஊரிலே ஆயிரம் பேசுகிறார்கள், அதற்கெல்லாம் நானா பொறுப்பாளி!''

''பார்ப்போமே! நீயும் அந்த நாசகாரக் கும்பலின் ஒருவரா, அல்லது நீதிக்கும் நேர்மைக்கும் கட்டுப்பட்ட நாணயஸ்தரா என்பது, இதிலே தெரிந்து விடுகிறது. பார்ப்போம்.''

கச்சாபகேசன் பி.ஏ., ஜெனரல் மானேஜரின் காரியதரிசியாக நியமிக்கப்பட்டான் — காமினி, ''மாமா'விடம் சென்று, ஆயிரங்கோடி நமஸ்காரம் தெரிவித்தாள் — உம்!

''வயசாகி விட்டது. இல்லையானால் இந்த ஆயிரம் கோடி நமஸ்காரமும் எனக்குத் தேவையில்லை, ஒரே ஒரு முத்தம் கொடு என்று கேட்டிருப்பேன்'' என்றார் மாதுர்பூதம்.

''ஆசையைப் பாரடி அக்கா!'' என்று காமினி கூறிவிட்டு, ஒரு அர்த்தம் ததும்பும் புன்னகையை மாதுர்பூதத்துக்கு அளித்து விட்டுச் சென்றாள். அந்தக் கிழமை முழுவதும், அவரை அந்தப் பொல்லாத புன்னகை வெகு பாடுபடுத்திற்று.

''மாமா! இதைப் பார்த்தீரா?'' என்று சொந்தம் கொண்டாடிக் கொண்டே, கே. கேசவன், பி.ஏ., ஒரு ஆங்கிலப் பத்திரிகையைக் கொடுத்தான் மாதுர்பூதத்திடம். அதிலே, ஜாதீயமும்

பராதீயமும் என்ற கட்டுரையைக் கச்சாபகேசன் தீட்டியிருந்தான். ஜாதி, ஜாதி என்று சதா பேசுவதும் தவறு, ஜாதியை ஆதரித்துப் பேசுவதும் தவறு, ஜாதி இன்னமும் இருக்கத்தான் வேண்டும் என்பதும் மடைமை. ஜாதி என்பது மடமை, கொடுமை என்று கண்டிப்பது அறிவுடைமை அல்ல; ஜாதியைப் பெரியவர்கள், பாரதசிரேஷ்டர்கள் தகுந்த காரணத்துக்காகவே, சிருஷ்டித்தார்கள் – அதனால் பல நல்ல பலன் விளைந்தது – அதிலே சிறந்த பலனே பாரதீயம் பாழாகாத முறையில் ஜாதீயத்தை அகற்றுவதே பண்பாளர் செயலாகும்.

இவ்வண்ணம் சுருளும், அலையும், பசையும் குழம்பியதாக ஓர் கட்டுரை.

படித்த மாதுர்பூதம் பரவசப்பட்டார்!

பலே! பலே! மகா புத்திசாலிடா நீ! ஏதோ, ஆபீசில் வேலை பார்த்தாலும், கிணற்றுத் தவளையாகிப் போகாமல், நாட்டிலே உள்ள பிரச்சினைகளைப் பற்றி ஆராய்ச்சியே நடத்தி வந்திருக்கிறாய். நமது ஜெனரல் மானேஜருக்கு ஜாதி ஒழிப்பு என்றால் உயிர்! அவர் பெரிய சீர்திருத்தக்காரர் – பார்சியைக் கலியாணம் செய்து கொண்டிருக்கிறார் – மூத்த பெண் இந்தோ சைனாக்காரனைத் திருமணம் செய்து கொண்டார் – இவர் கானோஜ் நாட்டுப் பிராமணர். உன் கட்டுரையைக் கண்டால், பிரம்மானந்தப்படுவார் – என்று வெகுவாகப் பாராட்டினார்.

''பார்த்தார்! படித்தார்! பாராட்டினார்! அத்துடன் மனிதகுலப் பண்பாட்டு ஆராய்ச்சி மாநாட்டுக்குச் சென்று வர அனுமதியும் அளித்தார் – அறுநூறு ரூபாய் செக்குடன்'' என்றான், கச்சாபகேசன்.

''முன்பே சொன்னேன், அதேதான் இப்போதும் – உன்னை உண்மையிலேயே மருமானாக்கிக் கொள்ள நான் கொடுத்து வைக்கவில்லை. தீர்க்காயுசாக இரு'' என்று ஆசீர்வதித்தார் மாதுர்பூதம்.

''அற்பாயுசு! அற்பாயுசு! ஜாதி என்பது ஆரியரின் சூழ்ச்சியாம் – திராவிடச் சமுதாயத்தைச் சீரழிக்கும் திட்டமாம்! பெரிய ஆராய்ச்சியாளர்! மடைப்பயல்! பிழைக்கத் தெரியாதவன் மண்ணைக்கவ்வி! – என்று கோபமாகக் கூறினார், மாதுர்பூதம், மூன்று மாதங்களுக்குப் பிறகு – கோதண்டம் ஒரு வார இதழில் தீட்டிய கட்டுரையைக் கண்டதும்.

'பார்ப்பனச் சூழ்ச்சி ஒழிக! ஆரிய ஆதிக்கம் ஒழிக! ஜாதி ஒழிக! சமதர்மம் வாழ்க!' என்ற முடிவுரையைப் படித்தார். பேனாவை எடுத்தார், மடமடவென ஜெனரல் மானேஜருக்கு ஒரு அறிக்கை எழுதினார்.

1. கோதண்டன் என்ற கிளர்க், வேலையில் ஒழுங்காக இல்லை.
2. எப்போதும் தாமதித்து வருகிறான்.
3. எதிர்த்துப் பேசுகிறான்.
4. ஆபீஸ் பைல்களை வீட்டுக்கு எடுத்துச் சென்று துர்விநியோகம் செய்கிறான்.
5. ஆபீஸ் சட்ட திட்டத்துக்கு விரோதமாக, வகுப்புவாத அரசியல் கட்சியில் சேர்ந்திருக்கிறான்.
6. சமதர்மம் வேண்டும் என்று முழக்கமிட்டு, அந்தச் சாக்கில் பொது உடைமைக் கட்சியை ஆதரிக்கிறான்.

இப்படி ஒரு பட்டியல் தயாரித்தார் – ஒவ்வொன்றுக்கும் ஆதாரங்களையும் உண்டாக்கி இணைத்தார்.

கட்டுரை வெளிவந்த பத்திரிகையின் மேலட்டை சிகப்பு.

உள்ளே லெனின் படம் இருந்தது. இந்த இரண்டும் போதும் என்றார் ஜெனரல் மானேஜர். கோதண்டன் வேலையினின்றும் நீக்கப்பட்டதாக உத்தரவு பிறப்பித்தார்.

கோதண்டன் வருத்தப்பட்டான்; கோபமுற்றான் – ஆனால் வெட்கம் விநாடியிலே கோபத்தைக்கூட விரட்டி விட்டது.

செச்சே! எவ்வளவு கோழைத்தனமாக நடந்து வந்தோம், கேவலம் 'ஒரு கிளர்க்' வேலையைக் காப்பாற்றிக் கொள்ள.

எவ்வளவு 'ரோஷமற்று' இருந்து வந்தோம்.

மானேஜர் – சம்பளம் 150 என்றார் – ஜெனரல் மானேஜருடன் வெளியூர்கள் செல்லும்போது, தனி அலவன்சு' உண்டு; வேறு பல சலுகைகளும் உண்டு. யாருக்குக் கிடைக்கும்? கோதண்டனுக்கா? மாதுர்பூதம், உலகநாதரைக் கண்டு பேசினார்.

''முதலியார்! உம்முடைய நெடுநாள் பேச்சு, உதட்டளவா, இதய பூர்வமானதா என்பதைச் சோதிக்க ஜெனரல் மானேஜர் ஒரு பரீட்சை வைத்திருக்கிறாரே தெரியுமா?''

''அதென்னய்யா, புதிய ஆபத்து.''

''என்னைக் கேட்டார், தனக்கு ஒரு காரியதரிசி வேண்டும் என்று; நான் யாரைச் சிபாரிசு செய்தேன் சொல்லும் பார்ப்போம்.''

''சுந்தரத்தையா?''

''அவனென்ன மகா சூரப்புலியா? ஏனய்யா, அவன் பி.எல். என்பதால் அப்படிக் கேட்கிறீரா?''

மனதுக்குச் சரியென்று பட்டதைக்கூடக் கூற முடியாமல், பயந்து பயந்து, வாய்மூடிக் கிடந்தோம்.

பார்ப்பன அதிகாரியிடம் பக்குவமாகப் பழக வேண்டும், நமக்குத் திராவிட இன உணர்ச்சி இருப்பதாக எள்ளளவும் தெரியவிடக் கூடாது. தெரிந்தால் தொலைத்து விடுவான் என்றெண்ணி, அடிபணிந்து கிடந்தோம்.

எத்தனை முறை இழிவாகப் பேசினான், ஏசினான், திராவிட இயக்கத்தை – ஒரு வார்த்தைகூட எதிர்த்துப் பேசினோமா?

வேலையைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் பார்ப்பன தாசனாக இருந்து வந்தோமே – கடைசியில் கண்ட பலன் என்ன? பாவி, கெடுத்தேவிட்டான்!

வேலை போயிற்று, பரவாயில்லை, இனியாவது மான ரோஷத்துடன், வாழும் வழி கண்டறியாமல், இன உணர்ச்சியுடன் நம்மாலானதைச் செய்யலாம்.

இத்தனை காலமும் இன உணர்ச்சியற்றுக் கிடந்ததற்கு இது தண்டனை! அவ்வளவுதான்!!

இவ்வாறெல்லாம் எண்ணியதுமட்டுமல்ல, உலகநாத முதலியாருக்கு, கோதண்டன் இன உணர்ச்சி எழ வேண்டிய அவசியத்தை எடுத்துரைத்தான்.

''சார்! இந்தப் பாப்பானுக காலை கழுவிக் குடிக்கிற புத்தி இருக்கிறவரைக்கும், நம்ம இனம் முன்னேறாது'' என்று கோதண்டன் சொன்னபோது உலகநாதர் பயந்தே போய் விட்டார்.

''வேலையிலே இருந்தா என்ன சார்! ஒழுங்காக, திறமையாக, இலஞ்ச இலாவண்யத்துக்கு ஆசைப்படாமே நடக்க வேண்டும். அவ்வளவுதானே – பார்ப்பன ஆபீசர் கால் செருப்பாகவா, நம்மவர்கள் ஆகிவிடணும்? ஈனத்தனமான பிழைப்பு, ஏன் சார்? பிழைக்க வழியா கிடைக்காது? பாடுபட

வலிவா இல்லை'' என்று வீரமாகப் பேசினான் கோதண்டன் – புத்தறிவு பூத்த நிலையில்.

வேலையினின்றும் கோதண்டத்தை நீக்குவதற்கான 'ஆர்டர்' கச்சாபகேசனால்தான், 'டைப்' அடிக்கப்பட்டது.

நண்பன் என்பதைக் காட்டுவதற்காக, ஆபீஸ் பிரதி வருவதற்கு முன்னதாகவே, கச்சாபகேசன், கோதண்டனிடம் ஒரு பிரதியைக் கொடுத்தான்.

''மாமா, அந்த இடத்துக்கு யார்?'' என்று காமினி கேட்டாள். ''யார், நீதான் சொல்லேன்?'' என்று கேட்டுக் கொண்டே, மாதுர்பூதம் அவள் கரங்களைப் பிடித்திழுத்து விளையாடினார்.

''வாலிபம் திரும்பறதோ! வாங்கோ காபி சாப்பிட'' என்று அழைத்து, சேட்டை ஏதும் நேரிடாதபடி தடுத்தாள், பகவதி.

**14-1-1956**

❄ ❄ ❄ ❄ ❄